

**விழிப்புடன் இருப்போம்**

சர்வதேச எய்ட்ஸ் தினத்தைக் குறிக்கும் சிறப்புக் கட்டுரை

PAGE 2



**கடல்தாண்டும் சோகங்கள்**

சட்டவிரோதமாக வெளிநாடு நோக்கி பயணிப்போர் எதிர்கொள்ளும் அபாயங்கள்

PAGE 4



**மீள்குடியமர்த்தல் நடவடிக்கைகள்**

வடக்கில் இடம்பெறும் மீள்குடியேற்றம் பற்றி ஐ.நா.தூதுவர் ஜோன் ஹோம்ஸ்

INTERVIEW PAGE 5


# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 41

இலவச பிரதி Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

29.11. 2009

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


# முகாம்வாழ் மக்கள் சுதந்திரமாக நடமாடலாம்

## டிசம்பர் 1 இலிருந்து அமுலுக்கு வரும்:அரசு

*ஏ.சொர்ணலிங்கம்*

வன்னியிலிருந்து இடம்பெயர்ந்து தற்பொழுது நிவாரணக்கிராமங்களில் தங்கவைக்கப்பட்டிருக்கும் மக்கள் எதிர்வரும் டிசம்பர் 1ஆம் திகதியிலிருந்து (செவ்வாய்க்கிழமை) சுதந்திரமாக நடமாட முடியும் என அரசாங்கம் அறிவித்துள்ளது.

நிவாரணக்கிராமங்களில் உள்ள மக்களில் ஒரு இலட்சத்திற்கும் அதிகமானவர்கள் தமது சொந்த இடங்களில்

**தங்கள் சொந்த இடங்களில் குடியமர்த்தப்படும் இடம்பெயர்ந்த மக்களுக்கு வழங்கப்படும் கொடுப்பனவை அரசு அண்மையில் இரண்டு மடங்காக அதிகரித்துள்ளது.**

**மீள் குடியமர்த்தப்பட்ட மக்களுக்கான கொடுப்பனவாக அரசாங்கம் ரூபா 25,000ஐ இதுவரை வழங்கி வந்தது. இத்தொகை தற்போது ரூபா 50,000 ஆக அதிகரிக்கப்பட்டுள்ளது.**

**முதலில் ரூபா 25,000ஐ கொடுப்பனவாகப் பெற்றவர்களுக்கும் இந்த மேலதிக தொகை வழங்கப்படும் என வட மாகாண ஆளுநர் மேஜர் ஜெனரல் ஜி. ஏ. சந்திரசிறி தெரிவித்தார்.**

மீளக்குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில் அடுத்த வருடம் ஜனவரி மாதம் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் யாவும் நிறைவடையும் எனவும் அரசாங்கம் தெரிவித்துள்ளது.

‘இன்னும் சில நாட்களில் நடமாடும் சுதந்திரம் முழுமையாக வழங்கப்படும் என நம்புகின்றேன்’ என அண்மையில் இலங்கைக்கு விஜயம் செய்திருந்த ஐக்கிய நாடுகளின் மனிதாபிமான நடவடிக்கைகளுக்கான உதவிச் செயலாளர் நாயகம் சேர் ஜோன் ஹோம்ஸ் தெரிவித்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

இந்த மக்களின் பாதுகாப்பு தொடர்பாக இராணுவம் வழமைபோலவே சகல நடவடிக்கைகளையும் எடுத்துள்ளதாக இராணுவப் பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார கூறினார். எனினும், மக்கள் நிவாரணக்கிராமங்களை விட்டு வெளியேறும்போது அவர்களைப் பதிவு செய்யும் நடவடிக்கைகளில் அரச உத்தியோகத்தர்களே ஈடுபடுவதாக மேலும் தெரிவித்தார்.

‘மக்கள் நிவாரணக்கிராமங்களைவிட்டு வெளியே செல்லலாம். எனினும் அவர்கள் செல்வதற்கு முதல் சில பதிவு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும். ஏனெனில், அவர்களது பாதுகாப்பிற்கு நாங்கள்தான் பொறுப்பு. அவர்கள் தங்களைப் பதிந்த பின்னர் தங்களது வேலைகளை வெளியில் சென்று முடித்துவிட்டு நிவாரணக் கிராமங்களுக்கு மீண்டும் வரலாம்’ என்றார் நாணயக்கார.

மக்கள் முகாம்களுக்கு வெளியே சென்று தங்களுக்கு விருப்பமான காலம் இருக்கலாம் எனவும் அவர்கள் எவ்வளவு காலம் வெளியே இருப்பார்கள் என்ற விபரத்தை முற்கூட்டியே கொடுக்கவேண்டும் எனவும் தெரிவித்தார்.

**அடுத்த வருடம் ஜனவரி மாதம் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் யாவும் நிறைவடையும் எனவும் அரசாங்கம் தெரிவித்துள்ளது**

‘அவர்கள் மற்றைய முகாம்களுக்குச்செல்லலாம். ஆனால், அவர்கள் அங்கே இரவு தங்க முடியாது. ஏனெனில், அந்த முகாம்களில் மற்ற முகாம்களைச் சேர்ந்தவர்கள் தங்க அனுமதிக்கப்படமாட்டார்கள்’ என நாணயக்கார மேலும் தெரிவித்தார்.



படஉதவி பாதுகாப்பு அமைச்சின் இணையத்தளம்

காம்களிலிருந்து தமது சொந்த இடங்களுக்குச் செல்லும் மக்கள்

## உங்கள் எண்ணங்களை எமக்குத் தெரிவியுங்கள்

*அன்பார்ந்த வாசகர்களே,*

*‘‘மீண்டும் வாழ்வோம்’’ தகவல் இதழானது இடம்பெயர்ந்து இடைத்தங்கல் முகாம்களில் வாழும் உங்களது நலன் கருதி வாரம் தவறாமல் வெளிவந்து கொண்டிருப்பதை அறிவீர்கள்.*

*இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான அரச மற்றும் அரச சார்பற்ற நிறுவனங்களின் முன்னெடுப்புகள், உங்கள் வாழ்வை மீளக்கட்டியெழுப்பக் கூடிய வாழ்வாதாரத் தகவல்கள் எனப் பலதரப்பட்ட விடயங்களையும் காத்திரமான முறையில் உங்களிடம் சேர்ப்பிக்கும் பணியை ‘‘மீண்டும் வாழ்வோம்’’ செய்து வருகிறது.*

*மெனிக்பாமிலுள்ள இடம்பெயர்ந்த மக்கள் யாவரையும் ஜனவரி மாத இறுதிக்குள் மீள்குடியேற்றவிருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ள நிலையில், அதன் பிறகான காலங்களிலும் உங்களது வாழ்நிலை மேம்பாட்டுக்கு உதவக் கூடிய தகவல்களைத் தரவேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருப்பதாகவே நாம் நம்புகிறோம்.*

*இது தொடர்பில் நீங்கள் எமக்கு எழுதி அனுப்பக்கூடிய கருத்துகள் மிகுந்த பயன்பயக்குவதாய் அமையும்.*

*கீழ்க்காணும் விடயங்கள் தொடர்பில் உங்களது அபிப்பிராயங்களை எமக்கு எழுதியனுப்புங்கள்:*

- *‘‘மீண்டும் வாழ்வோம்’’ இதழ் மற்றும் வானொலி நிகழ்ச்சி என்பன இதுவரை காலமும் உங்களுக்கு வழங்கி வந்த தகவல்களால் நீங்கள் பயனடைந்துள்ளீர்களா? எவ்வகையான பயன்கள்?*
- *நீங்கள் மீள்குடியமரும் இடங்களில் ‘‘மீண்டும் வாழ்வோம்’’ இதழ் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா?*
- *நீங்கள் எழுத்துத்துறை/இதழியல்துறையில் ஆற்றல்/ஆர்வம் உள்ள பாடசாலை/பல்கலைக் கழக மாணவரா? அவ்வறாயின் ‘‘மீண்டும் வாழ்வோம்’’ இதழுக்கு பங்களிக்க விரும்புகிறீர்களா? (ஆர்வமுள்ளவர்கள் உங்கள் சுயவிபரங்களை எமக்கு அனுப்பி வைக்கலாம். தேவைப்படுமிடத்து நாம் உங்களைத் தொடர்பு கொள்வோம்)*


**‘மீண்டும் வாழ்வோம்’**

**த.பெ. இல: 1039, கொழும்பு.**


க.பொ.த (சா/த) பரீட்சை:

## ‘இராணுவத்தினரால் வழங்கப்பட்ட அடையாள அட்டை ஏற்றுக்கொள்ளப்படும்’

*வியாஸ.கல்யாணசுந்தரம்*

எதிர்வரும் டிசம்பர் மாதம் இடம்பெறவுள்ள க.பொ.த (சா.த) பரீட்சையில், வவுனியா, முகாம்களிலிருந்து மொத்தமாக 5200 பேர் வரை தோற்றவிருப்பதாகவும் இவர்களுக்கு முகாம்களுக்குள் இராணுவத் தரப்பினால் அடையாள அட்டைகள் விநியோகிக்கப்பட்டிருப்பதாகவும் வடமாகாண மேலதிகக் கல்விப் பணிப்பாளர் பசுபதி அரியரட்ணம் தெரிவித்தார். அந்த அடையாள அட்டை இந்தத் தேர்விற்கு செல்லுபடியாகும் எனவும் அதுவும் இல்லாத பட்சத்தில் பரீட்சார்த்திகளுடைய புகைப்படங்களை உறுதிப்படுத்திக் கொடுப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிவித்தார்.

அடையாள அட்டை இல்லாத பரீட்சார்த்திகள் அங்குள்ள அதிபர் ஒருவரிடம் கையெழுத்துப்பெற்று பின்னர் வலயக் கல்விப் பணிப்பாளர் மூலம் அதனை உறுதிப்படுத்த வேண்டும் எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இவ்வருடம் க.பொ.த சாதாரணதரப் பரீட்சைக்கு நாடு முழுவதிலிருமிருந்து 545,132 மாணவர்கள் தோற்றுகின்றனர். இதற்காக 4307 பரீட்சை நிலையங்கள் அமைக்கப்பட

**முகாம்களிலிருந்து சுமார் 5200 பேர் தோற்றுவர்**

வுள்ளன. இந்நிலையில் நலன்புரி நிலையங்களில் 57 நிலையங்களில் தேர்வுகள் நடைபெறவுள்ளன. கிளிநொச்சி மாவட்டத்தில் 1 நிலையத்திலும் முல்லைத்தீவில் 2 நிலையங்களிலும் இத்தேர்வுகள் நடைபெறவுள்ளதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.அத்தோடு முல்லைத்தீவில் மல்லாவி மத்திய கல்லூரியிலும் மற்றும் யோகபுரம் மகாவித்தியாலயத்திலும்

» 3ஆம் பக்கம்

# எச்.ஐ.வி. வைரஸ்: விழிப்புடன் இருப்போம்

*எஸ்.பெல்லா டலிமா*

எச்.ஐ.வி (Human Immunodeficiency Virus) எனும் வைரசால் தாக்கப்பட்டு உடலின் நோய் எதிர்ப்பு சக்தியை இழக்கும் பரிதாபகரமான நிலைதான் எய்ட்ஸ் எனும் ஏமக்குறைவு நோய். இவ்வைரஸ் மனித உடலின் நோய் எதிர்ப்புக் கலன்களைத் தாக்கி எதிர்ப்பு சக்தியை இல்லாதொழிக்கும். மனிதரின் நோய் எதிர்ப்புத் தன்மையில் நிரந்தரப் பாதிப்பை ஏற்படுத்தும். எச்.ஐ.வி தொற்றுடையவரை எய்ட்ஸ் நோயாளி என்று கூறிவிட முடியாது. ஆனாலும் எச்.ஐ.வி தொற்றுடைய அனைவரும் எய்ட்ஸ் நோயாளியாகி இறப்பைச் சந்திக்கும் அவலநிலை ஏற்படுகிறது.

பாதுகாப்பற்ற உடலுறவு, பரிசோதனை

**போதுக்கழிப்பறைகள், நீச்சல் குளம், இருமல், தும்மல், நுளம்புக்கடி என்பவற்றின் மூலம் இந்நோய் பரவுவதில்லை.**

செய்யப்படாத இரத்தம், பயன்படுத்திய ஊசிகளைச் சுத்தப்படுத்தாமல் மீண்டும் பயன்படுத்தல் மற்றும் நோய்த்தொற்றுடைய தாயிடமிருந்து கருவிலுள்ள குழந்தைக்குத் தொற்றுதல் எனும் முறைகளில்தான் பெரும்பாலும் இந்நோய் பரவுகின்றது. எச்.ஐ.வி வைரசால் தாக்கப்பட்டவர் 3 ஆண்டுகளிருந்து 10 ஆண்டுகள் வரை இந்நோய்க்கான அறிகுறிகள் தெரியாமலேயே வாழ்வர். எய்ட்ஸ் நோய்க்குரிய அறிகுறிகள் வெளிப்படுகின்ற சந்தர்ப்பத்தில்தான் இவ் ஆட்கொல்லி நோயால் பீடிக்கப்பட்டிருப்பதை உணர முடியும்.

பாதுகாப்பற்ற உடலுறவு காரணமாகத்தான் இந்நோய் 80 வீதமான அளவில் பரவி வருவதாகத் தகவல்கள் தெரிவிக்கின்றன. இதில் இளைய தலைமுறையினரின் எண்ணிக்கை அதிகரித்துக் காணப்படுவதுதான் கவலைக்குரிய விடயமாகும். உலகளவில் 33.4 மில்லியன் பேர் இந்நோயால் பாதிக்கப்பட்டிருப்பதாக உலக சுகாதார நிறுவனம் மற்றும் UNAIDS இன் தகவல்கள் தெரிவித்துள்ளன. அத்தகவலின்படி கடந்த 2008ஆம் ஆண்டில் உலகளவில் இந்நோயால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை 2 மில்லியனாகவும் 430,000 சிறுவர்கள் பிறக்கும்போது எச்.ஐ.வி தொற்றுடனேயே பிறந்ததாகவும் ஆசியாக் கண்டத்தில் மாத்திரம் 4.7 மில்லியன் பேர் தொற்றுக்குள்ளாகியிருப்பதாகவும் தெரியவந்துள்ளது. அத்துடன் ஆசியாவில் மாத்திரம் 330,000 பேர்வரை இந்நோய் காரணமாக மரணித்துள்ளனர்.

இந்நிலையில், இலங்கையில் 1081 பேர் வரையில் எச்.ஐ.வியினால் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் 197 பேர் வரை உயிரிழந்திருப்பதாகவும் தெரியவந்துள்ளது. இந்நோயாளிகளில் பெரும்பாலானோர் தலைநகரான கொழும்பில் வாழ்பவர்கள் என்பதும் கண்டறியப்பட்டுள்ளது. இருப்பினும் சர்வதேச அளவில் எச்.ஐ.வி தொற்றின் தாக்கம் கடந்த 8 வருடங்களில் 17 சதவீதத்தால் குறைவடைந்துள்ளதாக ஐ.நா. அறிக்கை வெளியிட்டுள்ளமை மகிழ்ச்சிக்குரிய விடயமே.

சமூகப் பழக்கவழக்கங்கள் மூலம் இந்நோய் பரவாது என்பதால் இந்நோயாளியை சமூகத்திலிருந்து விலக்கிவைக்கவேண்டிய தேவை இல்லை. கை குலுக்குதல், தொடுதல், கட்டியணைத்தல், முத்தமிடல், ஒன்றாக வாழ்தல், பொதுக்கழிப்பறைகள், நீச்சல்குளம், இருமல், தும்மல், கொசுக்கடி என்பவற்றின் மூலம் இந்நோய் பரவுவதில்லை. இதுவரை இந்நோயைக் குணப்படுத்த மருந்துகள் எவையும் கண்டறியப்படாத காரணத்தால் எம்முடைய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மூலம் இந்நோய்த் தொற்றிலிருந்து எம்மைப் பாதுகாத்துக்கொள்ள முடியும்.



## டிசம்பர் 01 உலக எய்ட்ஸ் தினம்

திருமணத்திற்கு முன்னர் தகாத உடலுறவு கொள்வதைத் தவிர்த்தல், தெரியாத ஒருவருடன் உடலுறவு கொள்ளும்போது ஆணுறையைப் பாவித்தல், விபத்துக்களின் காரணமாக இரத்தம் ஏற்றும்போது அது பாதுகாப்பானதுதானா என்பதை உறுதி செய்தல் ஆகியவற்றின் மூலம் பெருமளவில் இந்நோய்த் தொற்றிலிருந்து எம்மைப் பாதுகாத்துக்கொள்ள முடியும்.

அத்தோடு ஒரு முறை பயன்படுத்திய ஊசியை மீண்டும் பயன்படுத்துவதானால் அதனை கிருமிநீக்கி (Sterillize) பயன்படுத்துவது சிறந்ததொரு வழிமுறையாகும், பயன்படுத்தாமல் இருப்பது அதைவிடச் சிறந்தது.

இந்நோய் தொற்றுடையவருக்கு ஆரம்ப காலத்தில் எந்தவொரு அறிகுறிகளும் தென்படாது என்பதால் இரத்தப் பரிசோதனைகள் மூலமாக மட்டும்தான் இந்நோய்த்தொற்று குறித்து அறிந்துகொள்ள முடியும்.

எச்.ஐ.வியால் தாக்கப்பட்ட அனைவருக்கும் சாதாரண மனிதரைப் போன்றே சகலவிதமான உரிமைகளும் உண்டு. கௌரவத்துடனும் மரியாதையுடனும் நடத்தப்பட வேண்டியவர்கள்

**இரத்தப் பரிசோதனைகள் மூலமாக மட்டும்தான் இந்நோய்த்தொற்று குறித்து அறிந்துகொள்ள முடியும்.**

அவர்கள். அவர்களுக்கு மதிப்பளித்து வாழ்வதுடன், ஒருவனுக்கு ஒருத்தி எனும் எமது பண்பாட்டு நெறிமுறைகளை வாழ்வியல் நெறிமுறைகளாகக் கொண்டு வாழ்ந்து இந்நோயிலிருந்து பாதுகாப்புப் பெறுவோம்!.

**துணையோடு மட்டும் தொடர்கின்ற வாழ்வுக்(கு)**
**இணையாக வேறுமருந் தில்லை - மனைவியெனும்**
**மானிடத்து மட்டுமே மையல் வளர்த்திந்த**
**மானுடத்தை வாழ்விப்போம் வா!**

– கவிஞர் வைரமுத்து



## பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

**தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்**

### அமெரிக்கா

**கண்ணிவெடிகளைத் தடுப்பதற்கான சர்வதேச உடன்படிக்கை- அமெரிக்கா இணக்கமற்ற நிலை**

கண்ணிவெடிகளைத் தடுப்பதற்கான சர்வதேச உடன்படிக்கையில் அமெரிக்கா இணைந்துகொள்ள வேண்டும் என மனித உரிமைகள் கண்காணிப்பகம் தெரிவித்துள்ளது. இந்த உடன்படிக்கை தொடர்பில் இடம்பெறும் கூட்டத்தில் கலந்துகொள்ளுமாறு மனித உரிமைகள் கண்காணிப்பகம் அமெரிக்காவுக்கு அழைப்பு விடுத்துள்ளது. கண்ணிவெடிகளை அப்புறப்படுத்தல் மற்றும் கண்ணி வெடிகளால் பாதிக்கப்பட்ட தரப்பினருக்கு உதவியளிப்பது தொடர்பில் கடந்த காலங்களில் அமெரிக்கா ஒத்துழைப்பு வழங்கியபோதிலும் ஒப்பந்தத்தில் இதுவரை கைச்சாத்திடவில்லையென கண்காணிப்பகம் சுட்டிக்காட்டியுள்ளது.

### சோமாலியா

**பலத்த சவால்களுக்கு மத்தியில் உள்நாட்டு மற்றும் சர்வதேச அகதிகள்**

சோமாலியாவில் இடம்பெயர்ந்துள்ள உள்நாட்டு மற்றும் சர்வதேச அகதிகள் பல்வேறு சவால்களை எதிர்கொண்டு வருவதாக தெரிவிக்கப்படுகின்றது. இடம்பெயர்ந்துள்ள அகதிகளுக்கான மனிதாபிமானப் பணிகளில் ஈடுபட்டுள்ள அதிகாரிகள் அடிக்கடி இடமாற்றப்படுவதால் இடம்பெயர்ந்துள்ள மக்கள் பெருமளவில் பாதிக்கப்பட்டுள்ளதாக சர்வதேச ஊடகவியலாளரொருவர் தெரிவித்துள்ளார். சோமாலியாவின் மத்திய பகுதியான வெலிவிடன் பகுதியில் இடம்பெயர்ந்துள்ளவர்களே இப்பிரச்சினையால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகின்றது.

### காஸா

**விவசாயம் மேற்கொள்வதில் சிக்கல்கள்**

காஸாவிலுள்ள யுத்த சூனியப்பகுதிகளில் விவசாயத்தை மேற்கொள்வதில் சிக்கல்கள் நிலவுவதாக காஸா விவசாயிகள் தெரிவித்துள்ளனர். இஸ்ரேல் காஸா மீது மேற்கொண்ட தாக்குதலையடுத்து அங்கு பலர் கொல்லப்பட்டதுடன், கட்டிடங்களும் பலத்த சேதத்துக்குள்ளாகின. இதனைத் தொடர்ந்து விவசாய விளைநிலங்கள் பாரிய பாதிப்புக்குள்ளாகியமையால் விவசாயத்தை மேற்கொள்வதில் விவசாயிகள் பல்வேறு சிரமங்களை எதிர்கொள்வதுடன், யுத்த சூனியப் பகுதிகளை நோக்கி செல்வதற்கும் அவர்களுக்கு அனுமதி வழங்கப்படவில்லையென கூறப்படுகின்றது.

### மியன்மார்

**புயல் காற்றினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிரந்தர கூடாரங்கள்**

மியன்மாரில் அண்மையில் வீசிய நர்ஜிஸ் புயல் காற்றினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு தேவையான கூடாரங்களை வழங்கும் பணிகளில் நோர்வேயின் அகதிகளுக்கான ஆணைக்குழு தொடர்ந்து ஈடுபட்டு வருகின்றது.நூற்றுக்கணக்கான மக்களுக்கு கூடாரங்கள் தேவையாக உள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. மக்களின் தேவைகளை கருதி மாதாந்தம் 200 கூடாரங்களை அமைத்துக் கொடுப்பதாக நோர்வேயின் அகதிகளுக்கான ஆணைக்குழு செயலாளர் நாயகம் எலிசபேத் ரஸ்முசோன் தெரிவித்துள்ளார்.

| | |
|---|---|
| ஆசியா | ஐரோப்பா |
| ஆபிரிக்கா | வட-அமெரிக்கா |
| அவுஸ்திரேலியா | தென்-அமெரிக்கா |




மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.



# பெண்களுக்கெதிரான வன்முறைகளை இல்லாதொழிப்போம்

*நிரஞ்சனி ரோலண்ட்*

பெண்களுக்கெதிரான வன்முறைகளை இல்லாதொழிப்பதற்கான சர்வதேச தினம் கடந்த புதன்கிழமை (25) அனுஷ்டிக்கப்பட்டது. டொமினிக்கன் குடியரசில் மனித உரிமைகளுக்காகவும் அரசியல் உரிமைகளுக்காகவும் போராடிய மீராபல் சகோதரிகள் மூவர் அந்நாட்டுச் சர்வாதிகாரியான ரபேல்ட்ரூஜிலோவினால் 1960ஆம் ஆண்டு நவம்பர் 25ஆம் திகதி படுகொலை செய்யப்பட்டனர். அதனை நினைவுகூரும் வகையில் இந்த நாள் அனுஷ்டிக்கப்படுகின்றது.

இன்று பெண்களுக்கெதிராக புரியப்படும் வன்முறைகள் பல வடிவங்களைப் பெற்றுள்ளன. வீடுகள், பொது இடங்கள், அலுவலகங்கள் என இன்று பல்வேறு இடங்களில் இவர்கள் உடல், உள ரீதியாக வன்முறைக்குட்படுகின்றனர்.

குடும்பத்தில் தனக்கு மிக நெருக்கமானவர்களினால் பெண்கள் வன்முறைக்குட்படுத்தப்படுவதாக ஐ.நா. அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. பெண்கள் இன்று பல்வேறு துறைகளில் கால்பதித்து சாதனைகள் படைத்து வருகின்றபோதிலும் அவர்களுக்கெதிராக இடம்பெறும் வன்முறைகள் அதிகரித்து வருகின்றமை வேதனையளிக்கின்றது.

**பெண்களுக்கெதிரான வன்முறைகள் குறித்து அங்குள்ள எமது அதிகாரிகளிடம் பெண்கள் முறையிடக்கூடியதாக இருக்கும். 2505135 என்ற தொலைபேசி இலக்கத்துடன் தொடர்புகொண்டால் முறைப்பாடுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.**

இலங்கைவாழ் பெண்களில் போரினால் பாதிக்கப்பட்டவர்களும் மலையகப்பெண்களும் மத்தியகிழக்கு நாடுகளுக்கு வீட்டுப் பணிப்பெண்களாக செல்வோரும் பல்வேறு வகையில் உள, உடல் சார்ந்த வன்முறைகளுக்குட்படுத்தப்பட்டு வருகின்றனர்.

பெண்களுக்கெதிரான வன்முறைகளை இல்லாதொழிப்பது தொடர்பில் சிறுவர் அபிவிருத்தி மற்றும் மகளிர் மேம்படுத்தல் அமைச்சின் கீழ் இயங்கும் தேசிய பெண்கள் குழுவினால் மேற்கொள்ளப்படும் செயற்பாடுகள் குறித்து அவ்வமைப்பின் நிறைவேற்று அதிகாரி எம் குணதிலக்க தெரிவிக்கையில். 'வடக்கு,கிழக்கு பகுதிகளில் இது தொடர்பான விழிப்புணர்வு நிகழ்ச்சிகளை மேற்கொண்டு வருகின்றோம். அதேபோல் வன்முறைகள் குறித்து அங்குள்ள எமது அதிகாரிகளிடம் பெண்கள் முறையிடக்கூடியதாக இருக்கும். 2505135 என்ற தொலைபேசி இலக்கத்துடன் தொடர்புகொண்டால் முறைப்பாடுகள் ஏற்றுக்கொள்ளப்படும். பின்னர், உரிய தரப்பினருக்கு அறிவிக்கப்பட்டு அவற்றுக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுவோம்' என்றார்.

மனித உரிமை இல்லத்துக்கான ஹட்டன் கிளையைச் சேர்ந்த சட்டத்தரணி சசி ரேகா, மலையகப் பெண்கள் இல்லத்து வன்முறைகளால் அதிகளவில் பாதிக்கப்படுகின்றனர் என்றார். கணவன், மனைவி இடையேயான வன்முறை, ஏனைய உறவு முறைகளால் ஏற்படும் வன்முறைகள் என்பவற்றால் இவர்கள் பாதிக்கப்படுகின்றனர். இதேவேளை மத்தியகிழக்கு நாடுகளுக்கு வீட்டுப் பணிப்பெண்களாக செல்வோர் பாலியல் ரீதியாக வன்முறைக்குட்படுத்தப்படுவதுடன் அடித்து துன்புறுத்தப்பட்டு கால், கைகளை இழந்த நிலையில் நாடு திரும்புகின்றனர். அதேபோல், வெளிமாவட்டங்களுக்கு வேலைக்குச் செல்வோரும் பல்வேறு வன்முறைகளை எதிர்கொண்டு வருகின்றனர்'' என்றார்.




இவ்வாறு வன்முறைகளுக்குட்படுத்தப்படும் பெண்களுக்கான சட்டப் பாதுகாப்பு மற்றும் மனித உரிமை இல்லத்தினால் மேற்கொள்ளப்படும் சேவைகள் குறித்து அவர் மேலும் தெரிவிக்கையில், பாலியல் ரீதியாக வன்முறைக்குட்படுத்தப்படுவது தொடர்பில் சட்ட ஏற்பாடுகள் இலங்கை தண்டனைச் சட்டக்கோவையில் வரையறுக்கப்பட்டுள்ளன. குற்றங்கள் மற்றும் தண்டனைகள் குறித்தும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றில் சில சீர்திருத்தங்கள் தற்போது செய்யப்பட்டுள்ளன. அதன் மூலம் பாதிக்கப்பட்ட

**பாலியல் ரீதியாக வன்முறைக்குட்படுத்தப்படுவது தொடர்பில் சட்ட ஏற்பாடுகள் இலங்கை தண்டனைச் சட்டக்கோவையில் வரையறுக்கப்பட்டுள்ளன**

பெண்கள் சிறந்த சட்ட உதவிகளை பெற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. எம்மிடம் முறைப்பாடு செய்பவர்களுக்கு சட்ட உதவிகளை வழங்குகின்றோம். வழக்குகளை தாக்கல் செய்வதற்கும் அதனைக் கொண்டு நடத்துவதற்கும் சட்டத்தரணிகளை நியமித்து உதவிகளை வழங்குகின்றோம் என்றார்.

## இராணுவத்தினரால்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

பரீட்சைகள் இடம்பெறவுள்ள அதேவேளை, கிளிநொச்சி மாவட்டத்தில் முழங்காவிலில் இத்தேர்வுகள் இடம்பெறவிருப்பதாக கல்விப் பணிப்பாளர் பசுபதி அரியரட்ணம் தெரிவித்தார்.

அவர் இதுபற்றி மேலும் தெரிவிக்கையில், 'புதிய பாடத்தில் இவ்வருடம் 410,274 பேர் தோற்றுகின்றனர். பாடசாலை பரீட்சார்த்திகளாக 405,257 பேரும் தனிப்பட்ட பரீட்சார்த்திகளாக 5017 பேரும் உள்ளனர். கிளிநொச்சி மாவட்டத்தில் நவம்பர் மாதம் 30ஆம் திகதிவரை விண்ணப்பங்களை ஏற்றுக்கொள்ளுமாறு பரீட்சை ஆணையாளர் அறிவித்திருக்கிறார். இதுவரை கிளிநொச்சி முழங்காவிலில் 100 பேர் பதிவினை மேற்கொண்டிருக்கின்றார்கள். இந்தத்தொகை அதிகரிக்கும் என நம்புகின்றோம். அதேபோல் மல்லாவியில் 125 மாணவர்கள் இதுவரை விண்ணப்பித்திருக்கின்றார்கள்' என்றார்.

## வளரும் பயிர்

**உங்கள் கதைகள்**

*லோஷினி*

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் குறுநாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்கு தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'வளரும் பயிர்' நாடகத்தின் சுருக்கம் இதோ:**

சிறுவர்களுக்கென்று விஷேடமாக சர்வதேச ரீதியாக அங்கீகரிக்கப்பட்ட பல உரிமைகள் உண்டு. அவற்றை மீறுபவர்களுக்கெதிரான சட்டங்களும் நடைமுறையில் உள்ளன. சிறுவர்களுக்கான உரிமைகளை உரிய முறையில் கிடைக்கச்செய்ய வேண்டும்.

பாடசாலை செல்லவேண்டிய வயதில் உள்ள ஒரு சிறுமியை அவளது பாட்டி குடும்ப சூழ்நிலை காரணமாக ஒரு வீட்டில் வேலைக்கு அனுப்புகிறார். அந்த சிறுமியிடமிருந்து பறிக்கப்படும் உரிமைகள் தொடர்பாக அமையப்பெற்றது 'வளரும் பயிர்' குறுநாடகம்.

ராம், ராதிகா இவர்களது வீட்டில் ராணி என்ற சிறுமி வீட்டு வேலைக்காக அமர்த்தப்படுகிறாள். ராணிக்கு பெற்றோர் இல்லை. பாட்டியுடன் தான் இருக்கிறாள். வயதான பாட்டி ராணியை வேலைக்கு அனுப்பி அதிலிருந்து கிடைக்கும் பணத்தில் வீட்டுச் செலவுகளைப் பார்த்துக் கொள்கிறார். ராணி ஒரு தேவாலய விடுதியில் தங்கியிருந்து பாடசாலை சென்று வரும் வேளையில் படிப்பை இடைநிறுத்திவிட்டு பாட்டியின் சொல்லைக் கேட்டு வேலைக்குப் போகிறாள்.

ராம், ராதிகா தம்பதியினரில் ராம் இளகிய மனம் படைத்தவர். ஆனால், ராதிகா சிறுமியால் செய்யமுடியாத வேலைகளைக்கூட செய்யும்படி துன்புறுத்துவாள்.

ஒரு நாள் ராம் படித்துவிட்டு மேசையில் வைத்த புத்தகம் ஒன்று காணாமல் போய்விட்டது. தேடியும் கிடைக்கவில்லை. ராதிகா ராணியை அழைத்து கேட்க, அவளும் காணவில்லை என்று கூறிவிடுகிறாள். ராதிகாவிற்கு ராணி மீது கோபம் வருகிறது. கடுமையாக திட்டுகிறாள். இதைப் பார்த்த ராம், ராணியைக் கண்டிக்க முனைய ராதிகா வேலைக்காரிக்கு பரிந்து பேசவேண்டாம் என்று ராமிற்கு கூறுகிறாள்.

**பாடசாலை செல்லும் வயதிலுள்ள பிள்ளையை வீட்டு வேலைக்கு அமர்த்துவது சிறுவர் உரிமை மீறல் ஆகும்.**

ராம் வேலைக்குப் போனவுடன் ராதிகா ராணிக்கு சரமாரியாக அடிக்கிறாள். ராணி ஒரு மூலையில் அழுது கொண்டிருக்கிறாள். ராம் தொலைந்து போன புத்தகம் தனது அலுவலகத்தில்தான் இருந்தது என்று ராதிகாவிற்கு தொலைபேசியில் கூறுகிறார். ராதிகா தான் செய்தது தவறு என்பதை தெரிந்தும் உணராதவளாக இருக்கிறாள்.

பல எதிர்பார்ப்புகளுடன் இருக்கும் அந்தக் குழந்தை தொடர்ந்து சித்திரவதையை அனுபவிக்க முடியாதவளாய் அழுகிறாள். தான் அநாதை என்பதால்தான் இந்த நிலை ஏற்பட்டு விட்டது என்று நினைத்து வருந்துகிறாள். இருந்தும் சொல்லி வேதனைப்பட அந்த வீட்டில் எவரும் இல்லை. அன்றாடம் ராணிக்கு நடக்கும் சித்திரவதைகளைப் பார்த்துக்கொண்டிருந்த அயல்வீட்டில் இருக்கும் கணேஷ், ராமிடம் தனது வருத்தத்தையும் கோபத்தையும் வெளிப்படுத்துகிறார். ராதிகாவால் ராணிக்கு இழைக்கப்படும் கொடுமைகள் பற்றி கூறுகிறார். பாடசாலை செல்லும் வயதிலுள்ள பிள்ளையை வீட்டு வேலைக்கு அமர்த்துவது சிறுவர் உரிமை மீறல் என்றும் அதை செய்பவர்களுக்கு எதிராக கடுமையான சட்டங்கள் இருப்பதாகவும் கூறுகிறார். சிறுமியை அடித்து சித்திரவதை செய்வதை தான் பொலிஸில் முறையிடப் போவதாகவும் எச்சரிக்கிறார்.

அதேவேளை, ராணியின் பாட்டி ராணியைப் பார்க்க வருகிறார். அந்த நேரத்தில் ராணி தனக்கு நடக்கும் சித்திரவதைகளைப்பற்றி சொல்லி அழுகிறாள். ஆனால், பாட்டி அதை பெரிதாக கணக்கெடுக்காமல் சாதாரணமாகப் பேசுகிறார். ராணி தன்னை மீண்டும் படிக்க அனுப்பும்படி கேட்கிறாள். முதலில் இருந்ததுபோல் தேவாலய விடுதியில் இருந்து தான் பாடசாலைக்கு செல்ல விரும்புவதாகக் கூறுகிறாள். பாட்டி அதனை கருத்திற் கொள்ளாமல் செல்கிறார்.

ராணிக்கு எவரிடமும் ஆதரவு இல்லாத நிலையில் அழுகிறாள். ராம் வேலை முடிந்து வீட்டிற்கு வருகிறார். உடனடியாக ராணியை அவளது பாட்டி வீட்டிற்கு அனுப்பி வைக்குமாறு ராம் கூற ராதிகா காரணம் கேட்கிறாள். பாடசாலை செல்லும் சிறுமியை வீட்டு வேலைக்கு வைத்திருப்பது குற்றம் என்றும் கணேஷ் பொலிஸில் முறையிடப் போவதாகக் கூறிய விடயத்தையும் தெரிவிக்கிறார். ராணியை வீட்டிற்கு அனுப்புவதே சிறந்தது என்றும் ராம் முடிவாகக் கூறுகிறார்.

நடைமுறையில் சிறுவர்களுக்கான உரிமைகளை உரிய முறையில்

# கடல் தாண்டும் மக்களின் கரை சேராச் சோகங்கள்

எஸ்.ரமணன்

சட்டவிரோத குடியேற்றவாசிகளை கட்டுப் படுத்துவது குறித்து பல்வேறு உலக நாடு களும் சர்வதேச அமைப்புகளும் தொடர்ச் சியான முனைப்புகளை மேற்கொண்டு வருகின்றன. உள்நாட்டு யுத்தம், வறுமை, வேலையில்லாப் பிரச்சினை என பல்வேறு காரணிகள் மக்களை அவர்களின் தாய் நாட்டி லிருந்து வெளியேறத் தூண்டுகின்றன.

இலங்கையின் இன முரண்பாடுகள் தோற் றம் பெற்ற எண்பதுகளின் ஆரம்பத்தில் இலங்கைத் தமிழர்களின் புலம்பெயர்வுகள் ஆரம்பித்தன. கட்டுப்பாடுகள் குறைவான தும் ஆபத்துகள் மிகுந்ததுமான கடல், தமிழ் மக்களின் புலம்பெயர்விற்கான பிரதான மார்க்கமாய் மாறியது.

பாக்கு நீரிணைக் கடந்து இந்தியாவிற்குச் செல்வது, முதல் தெரிவாக இருந்தாலும் சிலர் ஐரோப்பிய நாடுகள் மற்றும் அமெரிக்க கண் டம் வரை கூட கடல் வழி சென்றடைந்துள்ள னர். தற்போது நீண்டகால யுத்தம் நிறைவிற்கு வந்துள்ள நிலையிலும் புலம்பெயர்வுகள் தொடர்வதுதான் வேதனையானது.

*மனிதர்களைக் கடத்தும் குழுக்கள் என பரவலாக அழைக்கப்படும் இந்தக் குழுக்கள் குறித்தும் அவர் களின் செயற்பாடுகள் குறித்தும் மக்கள் விழிப்புடன் இருக்கவேண் டும் என்று ஐக்கிய நாடுகளின் புலம் பெயர்விற்கான அமைப்பு (ஐ.ஓ.எம்) போன்ற பல அமைப்புகள் உரத்து குரல்கொடுத்து வருகின்றன.*

சட்டவிரோதமான புலம்பெயர்வு என்பது மிகவும் ஆபத்தானது. எனினும், இதனையே வியாபாரமாகச் செய்யும் குழுக்களும் தற் போதுவரை செழிப்புடன் இயங்கி வருகின் றன. மனிதர்களைக் கடத்தும் குழுக்கள் என பரவலாக அழைக்கப்படும் இந்த குழுக்கள் குறித்தும் அவர்களின் செயற்பாடுகள் குறித் தும் மக்கள் விழிப்புடன் இருக்கவேண்டும் என்று ஐக்கிய நாடுகளின் புலம் பெயர்விற் கான அமைப்பு (ஐ.ஓ.எம்) போன்ற பல அமைப்புகள் உரத்த குரல்கொடுத்து வருகின் றன.

சட்டவிரோதமான புலம்பெயர்வின் ஆபத்துகளை வெளிப்படுத்தும் பரப்புரைத் திட்டங்கள் பல முன்னெடுக்கப்பட்டு வரு கின்ற போதிலும் மக்கள் சட்டவிரோதமான முறையில் புலம்பெயர்ந்து கொண்டே இருக் கின்றார்கள்.

1983ஆம் ஆண்டு முதல் இலங்கைத் தமி ழர்களில் சுமார் ஒரு மில்லியன் பேர் வெளி நாடுகளுக்கு புலம்பெயர்ந்துள்ளதாக புள்ளி விபரங்கள் தெரிவித்துள்ளன.

அண்மையில் இலங்கையில் இருந்து படகுப் பயணங்களை மேற்கொண்டு அவுஸ்திரேலியா விற்குச் செல்ல முயன்ற இலங்கையர்கள் பற்றிய அக்கறை சர்வதேச ரீதியில் அதிகரித்துள்ளது.

இலங்கையில் இருந்து சட்டவிரோதமான முறையில் புலம் பெயர்பவர்களால் அவுஸ்தி ரேலிய அரசாங்கம் கூட பெரும் நெருக்குவா ரங்களை சந்திக்க நேர்ந்துள்ளது. இது குறித்து ஆராயும் நோக்கில் அந்த நாட்டு வெளிவிவ கார அமைச்சர் ஸ்ரீபன் சிமித் இலங்கைக்கு விஜயம் செய்து சட்ட விரோத குடியேற்றவாசி களைக் கட்டுப்படுத்தும் வழிமுறைகள் குறித்து ஆராய்ந்திருந்தார்.

இதேவேளை, வீதி நாடகங்கள் மூலம் மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத் தும் நோக்கில் இலங்கையின் பிரபலமான விளம்பர முகவர் நிறுவனம் ஒன்றுடன் அவுஸ்திரேலிய அரசாங்கம் ஒப்பந்தம் செய் துகொண்டுள்ளது. இந்த நிறுவனம் இலங்கை யின் புகழ்பெற்ற நாடகக் கலைஞர்கள் மூலம் சட்டவிரோத குடியேற்றங்களினால் ஏற்படும் பாதிப்புகள் குறித்து விழிப்புணர்வு பிரசாரங் களை மேற்கொள்ளவுள்ளது.

அவுஸ்திரேலியாவில் அரசியல் தஞ்சம் கோரும் நோக்கில் பயணம் செய்த சுமார் 250 இலங்கையர்கள் இந்தோனேசிய கடற் படையினரால் தடுத்து நிறுத்தப்பட்டுள்ளனர். இந்தோனேசியாவின் மெராக் என்ற பகுதி யில் இவர்களின் கப்பல் தரித்து நிற்கின்றது.

தாங்கள் இந்தோனேசியாவில் தரையிறங்க முடியாது என இந்தக் கப்பலில் தங்கியுள்ள மக்கள் கூறுகின்றனர். ஒரு மாதத்திற்கும் மேலாகக் கடலில் தரித்துள்ள இவர்களில் பெண்கள் மற்றும் சிறுவர்களின் நிலமைகள் மோசமடைந்து வருவதாகத் தெரிவிக்கப்பட் டுள்ளது.

இவர்களின் பராமரிப்பிற்காக அனுப்பி வைக்கப்பட்ட சர்வதேச புலம்பெயர்தலுக் கான அமைப்பின் பணியாளர்களை அந்த அமைப்பு விலக்கிக்கொண்டுள்ளது. விரக்தி யும் ஆத்திரமும் அடைந்த நிலையில் உள்ள கப்பல் பயணிகளால் தமது பணியாளர்க ளுக்கு பாதிப்புகள் ஏற்படும் என்று தாங்கள் அஞ்சுவதாக அந்த அமைப்பு தமது நடவ டிக்கை குறித்து விளக்கமளித்துள்ளது



அவுஸ்திரேலியாவில் புகலிடம் கோரி இந்தோனேசிய கடற்கரையில் நிர்க்கதியாக நின்ற இலங்கை தமிழ் அகதிகள்

*இந்த ஆண்டில் அவுஸ்திரேலிய கடற்பரப்பில் 25 புகலிட அந் தஸ்து கோரிகள் பரிதாபகரமாக உயிரிழந்துள்ளனர். இலங்கை யில் இருந்து பயணம் செய்த 39 பேரைக்கொண்ட படகு ஒன்று இந்த மாத ஆரம்பத்தில் கொக் கோஸ் தீவிற்கு அருகில் மூழ்கிய தில் 11 பேர் உயிரிழந்துள்ளதா கத் தெரிவிக்கப்பட்டுள்ளது*

இந்தக் கப்பலில் உள்ள சிறுவர்களில் சுமார் 60 பேர் நோய்த் தாக்கங்களுக்கு உட்பட் டுள்ளனர். இவர்களுக்கு உரிய சிகிச்சைகளை வழங்க முடியாத நிலை ஏற்பட்டுள்ளதாகவும் குறிப்பிடப்படுகின்றது.

இதேவேளை, ஓசியானிக் வைக்கிங் என்ற மற்றுமொரு கப்பலில் பயணம் செய்த சுமார் 56 பேர் இந்தோனேசியாவில் தரையிறங்கி யுள்ளனர். இவர்களும் சுமார் ஒரு மாத காலம் இந்தோனேசிய கடற்பரப்பில் பல்வேறு சவால் களின் மத்தியில் தரித்திருந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களின் எதிர் காலம் குறித்து அவுஸ்திரேலிய மற்றும் இந்தோனே சிய அரசுகள் ஆராய்ந்து வருகின்றன.

இதேவேளை, பாதுகாப்புத் தேடி புலம்பெ யரும் மக்கள் தொடர்பில் சர்வதேச சமூகம் உரிய அக்கறை காட்டுவதில்லை என்று சர்வ தேச மன்னிப்புச் சபையின் செயலாளர் ஐரிக் கன் குற்றம் சுமத்தியுள்ளார். சர்வதேச ரீதியில் கவன ஈர்ப்பை ஏற்படுத்தி நிற்கும் இந்த புலம்பெயர்வுகள் ஒரு பெருந்துயரின் வழி வந்தவை என்பது மறுப்பதற்கில்லை. இந்த ஆண்டில் அவுஸ்திரேலிய கடற்பரப்பில் 25 புகலிட அந்தஸ்து கோரிகள் பரிதாபகரமாக உயிரிழந்துள்ளனர். இலங்கையில் இருந்து பயணம் செய்த 39 பேரைக்கொண்ட படகு ஒன்று இந்த மாத ஆரம்பத்தில் கொக்கோஸ் தீவிற்கு அருகில் மூழ்கியதில் 11 பேர் உயிரி ழந்துள்ளதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இவை எமக்குத் தெரிந்த கதைகள். ஆனால், எங்களுக்கும் உங்களுக்கும் தெரியாமல் கட லின் மடியில் ஆகுதியானவர்களைக் காலம் கூட மறந்துவிட்டுள்ளது.

ஆனாலும், இதுபோன்ற ஆபத்தான பய ணங்கள் மக்கள் வேண்டி விரும்பிச் செல்லும் வாழ்க்கைக்கு முரணாக அவர்கள் எதிர்பார்க் காத விளைவுகளை ஏற்படுத்திவிடுகின்றன.

## முச்சக்கர சைக்கிள் இழுவை வண்டி தொடர்பான தகவல்கள்




பக்கவாட்டுத் தோற்றம்




பின்புறத் தோற்றம்




மேற்புறத் தோற்றம்

### தொழில்நுட்ப அளவீடுகள்

- **கொள்ளளவு:** 200 கிலோகிராம்
- **சக்கரம் (பின்) :** 1473 மிமீ
- **பாரம் :** 45 கிலோகிராம்
- **முச்சக்கர வண்டியின் அளவு :** 2210 X 879 X 975 மிமீ
- **இழுவை வண்டியின் அளவு :** 899 X 559 X 394 மிமீ

இது முழுவதும் உள்ளூரில் தயாரிக்கப்பட்ட மூலப்பொருட்களையும் சைக்கிள் உதிரிப் பாகங்களையும் கொண்டு தயாரிக்கப்பட்ட 20 விட்ட முடைய மூன்று சக்கரங்களைக் கொண்ட போக்குவரத்துச் சாதன வகை யாகும். இதனை இயக்குவது சுலபமாக இருப்பதோடு, 200 கிலோகிராம் நிறையுடைய பொதியினையும் கொண்டு செல்லக்கூடியது.

**சட்டவடிவமும் மூலப்பொருட்களும்**

இதற்கு 1 X 1½" இரும்பும் 1 X 1 சட்டமும்,GI தொட்டி உரு மற்றும் மென்மையான இரும்புத் தகடுகளும் பாவிக்கப்படுகின்றன. இதனை அமைப்பதற்கு முழுமையாக மின்சாரம் பாவிக்கப்படும்.

**அனுகூலங்கள்:**

சுய தொழிலில் ஈடுபடுபவர்களுக்கு சுதேசிய முறையிலான இந்தப் போக்குவரத்து சாதனம் பல்வேறு பிரயோசனங்களை அளிக்கிறது.

**அவை:**

- பேக்கரி உற்பத்திகளை ஏற்றியிறக்குவதற்கு பாவிக்கப்படும்.
- நடமாடும் வியாபாரத்தை ஆரம்பிப்பதற்கு உதவும்.
- ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு சாதாரண அளவைக் கொண்ட ஒரு பொருளை ஏற்றியிறக்குவதற்கு உதவும். அத்துடன் சிறிய மாற்றங்களை ஏற்படுத்தி இதனை இன்னும் பல தேவைகளுக்குப் பாவிக்க முடியும். இதனை இயக்குவதற்கு ஒருவர் சிறிது பயிற்சி பெற வேண்டியது அவசியம். இந்த இலகு பாவனைச் சாதனத்திற்கு அதிக பராமரிப்புச் செலவும் தேவைப்படாது. சிறிய கம்மாலையில் இதற்கான திருத்த வேலைகளையும் மேற்கொள்ள முடியும்.

மேலதிக தகவல்களுக்கு எம்மைத் தொடர்பு கொள்ளவும்.
+94-11- 282 9412





# “இடம்பெயர்ந்தவர்கள் சொந்த இடங்களுக்குச் செல்ல ஆரம்பித்துள்ளமை நல்ல விடயம்”

## ஜோன் ஹோம்ஸ்

**இலங்கைக்கு கடந்த வாரம் விஜயம் மேற்கொண்டிருந்த ஐக்கிய நாடுகளின் மனிதாபிமான நடவடிக்கைகளுக்கான உதவிச் செயலாளர் ஜோன் ஹோம்ஸ் ‘மீண்டும் வாழ்வோம்’ இதழுக்கு வழங்கியிருந்த விசேட செவ்வி:**

**உங்களது விஜயத்தின் மூலம் நீங்கள் எதிர்பார்த்த பலனை அடையக்கூடியதாக இருந்ததா?**

நலன்புரி நிலையங்களில் உள்ளவர்களினதும் மீள்குடியமர்த்தப்பட்ட மக்களினதும் நிலமைகள் முன்னேற்றமடைந்துள்ளதைக் காணக்கூடியதாக உள்ளது. இது தொடர்பாக யாழ்ப்பாணம், வவுனியா, மன்னார் மற்றும் கொழும்பிலுள்ள அரச அதிகாரிகளுடன் கலந்துரையாடினேன். தற்போது நிலமைகள் மாற்றமடைந்து வருகின்றன. நலன்புரி நிலையங்களில் தங்கியிருந்தவர்களில் பாதிப்பேர் அங்கிருந்து வெளியேறியுள்ளனர். பலர் தமது சொந்த இடங்களை நோக்கிச் சென்றுள்ளனர். இருந்தபோதிலும், கலந்துரையாடவேண்டிய சில விடயங்கள் உள்ளன. தற்போது ஏ-9 வீதியினூடாக யாழ்ப்பாணத்துக்கும் தெற்குக்குமான போக்குவரத்துக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. உளவியல் ரீதியில் இது நல்லதொரு மாற்றம். உண்மையான சமாதானம் நோக்கிய அசைவு என்றே கூறவேண்டியுள்ளது. எனினும், இன்னும் நெடுந்தூரம் பயணிக்க வேண்டியுள்ளது.

**இடம்பெயர்ந்தவர்களின் நிலமைகள் குறித்து உங்களின் அவதானம் என்ன? உங்களுடைய கடந்தகால விஜயங்களுடன் ஒப்பிடும்போது நிலமைகள் முன்னேற்றமடைந்துள்ளதை அவதானிக்கக்கூடியதாக இருந்ததா?**

### சொந்த இடங்களுக்குச் செல்வதையே அவர்கள் அதிகமும் விரும்புகின்றனர்

மக்கள் தற்போது அவர்களின் வீடுகள் நோக்கி செல்ல ஆரம்பித்துள்ளமை சிறந்த விடயமாகும். நலன்புரி நிலையங்களில் தங்கியிருப்பதைவிட சொந்த இடங்களுக்குச் செல்வதையே அவர்கள் அதிகளவில் விரும்புகின்றனர். மீள்குடியேற்ற நடவடிக்கைகளின் தரம் குறித்து சில கரிசனைகள் எமக்குள்ளன. இடம்பெயர்ந்த மக்களுடன் நெருக்கமான தொடர்புகளைப் பேணுவதற்கு விரும்புகின்றோம். அதன் மூலம் அவர்களிடமிருந்து பல விடயங்களை அறிந்துகொண்டு அவர்களுக்கு உதவிகளை செய்யக்கூடியதாக இருக்கும். கண்ணிவெடிகள் முற்றாக அகற்றப்பட்ட பிரதேசங்களுக்கா அவர்கள் செல்கின்றனர், அவ்விடங்களில் கண்ணிவெடிகள் அகற்றப்படாதிருக்கின்றனவா, அபாயமான இடங்கள் அடையாளமிடப்பட்டுள்ளனவா என்பது குறித்து அறிந்துகொண்டால் அவர்களுக்கு உதவிகளை செய்யக்கூடியதாக இருக்கும்;. அதேபோல், மீள்குடியமர்த்தப்படும் மக்களுக்கான பாடசாலை வசதிகள், சுகாதார சிகிச்சை நிலையங்கள் உள்ளனவா என்பது அவதானிக்கப்பட்டு வருகின்றது.

**நலன்புரி நிலையங்களுக்குச் செல்வதற்கான அனுமதியை அரசு எந்தவொரு உள்நாட்டு மற்றும் சர்வதேச அரசசார்பற்ற நிறுவனத்திற்கோ அல்லது ஐ.நா அமைப்பிற்கோ வழங்கவில்லை. இடம்பெயர்ந்தவர்களுக்காக ஐ.நா.வினால் முன்னெடுக்கப்படும் மனிதாபிமான நடவடிக்கையில் இது எவ்வாறான தாக்கத்தை ஏற்படுத்தும்?**




நீங்கள் குறிப்பிடுவது தவறானது என நினைக்கின்றேன். நலன்புரி நிலையங்களுக்குச் செல்வதற்கு எமக்கு முழுமையான அனுமதி வழங்கப்பட்டுள்ளது. ஐ.நா அமைப்புகளுக்கும் அரசசார்பற்ற நிறுவனங்களுக்கும் மெனிக்பாம் மற்றும் ஏனைய முகாம்களுக்கு செல்வதற்கு முழுமையான அனுமதி வழங்கப்பட்டுள்ளது. முகாம்களுக்குச் செல்வதற்கான அனுமதி தொடர்பில் சர்வதேச செஞ்சிலுவைச் சங்கம் சில பிரச்சினைகளை எதிர்கொண்டன. அது வேறொரு விடயம் எனினும், அது தொடர்பாக அரசுடன் அவர்கள் கலந்துரையாடுகின்றனர்.புலிகளுடன் தொடர்புடையவர்கள் என்ற சந்தேகத்தின் பேரில் கைது செய்யப்பட்டு புனர்வாழ்வு நிலையங்களில் வைக்கப்பட்டுள்ள பத்தாயிரம் தொடக்கம் பதினொராயிரம்; வரையிலானோரை பார்வையிடுவதற்கான அனுமதியை சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தினூடாக அல்லது வேறு வழியில் பெற்றுக்கொள்வதற்கு விரும்புகின்றோம்.

**இடம்பெயர்ந்த மக்கள் தமது சொந்த இடங்களில் மீள்குடியமர்த்தும் செயன்முறையை அவதானிப்பதற்கு ஐ.நா எவ்வாறான முறைமைகளைக் கையாளப்போகின்றது?**

மீள்குடியேற்ற நடவடிக்கைகளை எம்மால் முடிந்தவரை உன்னிப்பாகக் கவனித்து வருகின்றோம். சரியான இடங்களில் மீள்குடியேற்றம் இடம்பெறவில்லையென்ற விதமான குற்றச்சாட்டுகளை நான் கேள்விப்படவில்லை. எனினும், யாழ்ப்பாணத்தில் 6000 பேர் மீள்குடியமர்த்தப்பட்டுள்ளனர். அவர்கள் அனைவரும் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. இருப்பினும், ஏதோ ஒரு விதத்தில் யாழ்ப்பாணத்துடன் தொடர்புபட்டிருக்கின்றனர். நலன்புரி முகாம்களில் இருப்பதைவிட அங்கு செல்வதை அவர்கள் விரும்புவதாகத் தெரிவித்துள்ளனர். இம்மக்கள் சொந்த இடங்களில் மீள்குடியமர்த்தப்படுவதற்கான சாத்தியக்கூறுகள் தென்படும் பட்சத்தில் அவர்கள் அங்கு மீள் குடியமர்த்தப்படுவார்கள். எனினும், சில இடங்களில் கண்ணிவெடிகள் அகற்றும் பணிகள் பூர்த்தியாக்கப்படவில்லை. அதனால் இந் நடவடிக்கைகள் கடினமடைந்துள்ளன.

**போரினால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் செல்வதற்கான அனுமதியைப் பெற்றுத் தருமாறு ஐ.நா அரசிடம் கோரியுள்ளது. அனுமதி கிடைக்கும் என எதிர்பார்க்கின்றீர்களா?**

அனுமதி கிடைக்கும் என நினைக்கின்றேன். வன்னிக்குப் போவதற்கான அனுமதி தற்போது கிடைக்கப்பெற்றுள்ளது. கண்ணிவெடி அபாயம் உள்ள இடங்கள் தவிர்ந்த ஏனைய இடங்களுக்கு நாம் செல்வதை அரசு தடுக்காது என நினைக்கின்றோம். பாதுகாப்பு தொடர்பில் எமக்கான சில ஒழுக்கமுறைகள் உள்ளன. படிப்படியாக எமக்கு அனுமதி வழங்கப்படுகின்றது.

### மீள்குடியேற்ற நடவடிக்கைகளை எம்மால் முடிந்த வரை உன்னிப்பாகக் கவனித்து வருகின்றோம்

**புனர்வாழ்வு நிலையங்களுக்குச் செல்வதற்கான அனுமதி ஐ.நா.விற்கு எப்போது கிடைக்கும் என நினைக்கின்றீர்கள்? இது தொடர்பாக ஏதாவது கலந்துரையாடல் மேற்கொள்ளப்பட்டதா?**

ஆம், அங்கு செல்வதற்கான அனுமதியைப் பெறுவது தொடர்பில் முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றோம். ஆனால், சரியான தரப்பினருக்கு இந்த அனுமதி வழங்கப்படவேண்டும் என நான் நினைக்கின்றேன். சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தினரே பொருத்தமானவர்கள். ஏனெனில், அவர்கள் இது தொடர்பில் தேர்ச்சிபெற்றவர்கள். அதே வேளை, நம்பகத்தன்மையுடையவர்கள். ஆரம்பத்தில் புனர்வாழ்வு நிலையங்களுக்குச் செல்வதற்கு அவர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டிருந்தது. அரசுடன் அவர்கள் கொண்டிருந்த தொடர்புகளில் சிக்கல்கள் ஏற்பட்டதையடுத்து அனுமதி மறுக்கப்பட்டது. இவர்களுக்கான அனுமதி மீள வழங்கப்படும் என நம்புகின்றேன்.

**போர் முடிவுற்று ஐந்து மாதங்கள் கடந்துவிட்டன. ஆனால், போரின்போது ஏற்பட்ட இழப்புகள் குறித்து சர்வதேசத்திற்கு எந்தவொரு தகவலும் தெரியவில்லை. ஐ.நா.வின் மனிதாபிமானப் பணிகளுக்கான தலைவர் என்ற வகையில் இந்தத் தகவல்களை தெரிந்துகொள்வதற்கு எவ்வாறான முயற்சிகளை மேற்கொண்டீர்கள்?**

இந்தத் தகவல்களைத் தெரிந்துகொள்வதற்கு எந்தவொரு வழியும் இல்லை. இது குறித்து நாம் ஆரம்பத்திலும் தெரிவித்திருந்தோம். இழப்புகள் அதிகமாக இருக்கும் என்பதை நாம் நம்புகின்றோம். பொதுமக்களின் இழப்புகள் ஏற்றுக்கொள்ள முடியாத அளவுக்கு அதிகம். ஆனால் எத்தனை பேர் என்பதை எம்மால் கூறமுடியாதுள்ளது. ஆயிரக்கணக்கானோர் என்பதில் ஐயமில்லை. பொதுமக்கள் குறித்து சிந்திக்காமல் பாரிய ஆயதங்களைப் பயன்படுத்தியமை குறித்து நாம் அரசிடம் கேள்வியெழுப்பியபோது அவ்வாறான பாரிய ஆயுதங்களைப் பயன்படுத்தவில்லையென அவர்கள் தெரிவித்திருந்தார்கள். இந்த விடயம் குறித்து எமது நிலைப்பாட்டிலிருந்து நாம் பின்னடையவில்லை. ஆனால் தற்போது இழப்புகள் குறித்த முழுமையான எண்ணிக்கையைப் பெற்றுக் கொள்ளும் நிலையில் நாம் இல்லை.

### நலன்புரி நிலையங்களிலுள்ள இடம்பெயர்ந்த மக்களுக்கு நேரடியாக உதவிகளைச் செய்ய விரும்புகின்றோம்.

**வடக்கிலுள்ள இடம்பெயர்ந்த மக்களுக்கு நீங்கள் கூற விரும்பும் முக்கிய செய்தி என்ன?**

நலன்புரி நிலையங்களிலுள்ள இடம்பெயர்ந்த மக்களுக்கு நேரடியாக அவசர உதவிகளைச் செய்ய விரும்புகின்றோம். அதே வேளை, மீள்குடியமர்த்தப்படும் மக்களின் வாழ்க்கையையும் வாழ்வாதாரங்களையும் மீளக்கட்டியெழுப்புவதற்கான உதவிகளை மேற்கொள்பவருக்கு உதவியளிக்கவும் நாம் விரும்புகின்றோம். இந்த நடவடிக்கைகள் எவ்வாறு முன்னெடுக்கப்படுகின்றன என்பது குறித்து உன்னிப்பாக அவதானிப்பதுடன், அவை முறையாக மேற்கொள்ளப்படுவதை உறுதிப்படுத்தி அதற்குத் தேவையான உதவிகளை வழங்க முடியும்.

மக்கள் எந்தவொரு பீதியும் இன்றி தங்களின் சொந்த இடங்களுக்குச் செல்லக்கூடியதாக இருக்கும் என கூறமுடியும்.

# சிறார்களின் கைவண்ணத்தில்....




**அன்பான தம்பி, தங்கைகளே**

உங்களில் பலபேர் ஏராளமான ஓவியங்களையும் வேறுபல ஆக்கங்களையும் எமக்கு அனுப்பி வைத்திருக்கிறீர்கள். இடவசதி கருதி அவற்றில் சில மாத்திரமே இவ்வாரம் பிரசுரம் பெறுகின்றன... ஏனையவற்றை அடுத்து வரும் வாரங்களில் வெளியிடுவோம்... உங்கள் எண்ண வெளிப்பாடுகளை ஓவியமாக மாத்திரமாயில்லாது கட்டுரை, கவிதை, சிறுகதை முதலான வடிவங்களிலும் அனுப்பலாம். நாம் கீழே தந்திருக்கும் தலைப்பை ஒட்டிய உங்களது படைப்புக்களை எங்களுக்கு அனுப்பிவையுங்கள்.

இந்த வாரத் தலைப்பு: **நான் கண்ட கனவு**

ஆக்கங்களை அனுப்ப வேண்டிய முகவரி:

**பூந்தளிர், 'மீண்டும் வாழ்வோம்', த.பெ. இல: 1039, கொழும்பு.**



**கி.பிரணித்** தரம் 8. கதிர்காமர் ந.பு.நி.



**கௌரிகரண் நர்மதா** வலயம் A 15/5, கதிர்காமர், ந.பு.நி.



**T.சர்மினி,** தரம் 10,வீ.இல 109, வலயம் 44, இராமநாதன் ந.பு.நி.



**செ.கிசாந்தன்,** தரம் 5, கதிர்காமர், ந.பு.நி.



**ம.கிருஷ்ணரூபி** வீ.இல. 641, பிரிவு 10, இராமநாதன், ந.பு.நி.



**நடராசா சுபாஷினி,** வீ.இல. A 15/5, மெனிக்பாம், ந.பு.நி.



**ஆ.தரனீஸ்வரன்** இராமநாதன், ந.பு.நி.



**ம.சுரேமிகா** வலயம் 24, வீ.இ.131, இராமநாதன் ந.பு.நி.



**த.சிந்துயா** வலயம் R 35/1, ஆனந்தகுமாரசாமி, ந.பு.நி.



**ஐ.திலோஜன், பிளக் 2.** இல 402, அருணாசலம், ந.பு.நி.



**ஆ.தயாகரன்** இராமநாதன், ந.பு.நி.



**ஆறுமுகம் புவனராஜ்,** தரம் 10, கதிர்காமர் ந.பு.நி.



**ம.கிருஷ்ண பேபி,**தரம் 8,



**செ.குகநேசன்** தரம் 8, கதிர்காமர், ந.பு.நி.

# பூந்தளிர்

எஸ்.பேல்லா டலிமா

**குறள்4**

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

**விளக்கம்:**
விருப்பும் வெறுப்பும் இல்லாதவனாகிய இறைவனின் திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்கு, எவ்விடத்திலும், எக்காலத்திலும் துன்பம் இல்லை.

## குட்டித் தகவல்கள்

1. எத்தனை வகையான காளான்கள் உள்ளன? **சுமார் 70,000**
2. திரையரங்கு இல்லாத நாடு எது? **சவுதி அரேபியா**
3. மிகப்பெரிய வைரச்சுரங்கம் உள்ள நாடு எது? **கிழக்கு சைபீரியா**
4. உலகின் கூரை எனப்படுவது எது? **திபெத்**

**விஜயகுமார் தனுஷன், தரம் 10, வலயம் 3, வீ.இல. 115 இராமநாதன் நலன்புரி நிலையம்**

## இறக்கும் முன் ஈகை செய்



ஓர் ஊரில் செல்வந்தன் ஒருவன் இருந்தான். அவனுக்குக் குழந்தைகள் இல்லை. அவன் மிகவும் கருமியாக இருந்ததால் அவனால் யாருக்கும் எவ்விதப் பயனும் இல்லை. ஊர் மக்கள் அவனை இகழ்ந்து பேசினார்கள். ஒரு நாள் செல்வந்தன் துறவி ஒருவரைக் காணச்சென்றான். 'ஐயா, நான் இறந்த பிறகு என் சொத்துக்கள் எல்லாம் தர்மத்திற்குத்தான் செல்லப்போகின்றன. ஆனால் ஊர் மக்கள் என்னைப் பாவி என்று திட்டுகின்றனர். ஏன் என்று தெரியவில்லை'' என்றான். அதற்குத் துறவி, 'பசுவிற்கும் பன்றிக்கும் நடந்த உரையாடலைச் சொல்கின்றேன் கேள், உனக்கு உண்மை புரியும்'' என்றார்.

பன்றி ஒன்று பசுவை சந்தித்தது, 'மக்கள் எல்லோரும் உன்னைப் பற்றியும் உன் இனிய இயல்புகளைப் பற்றியும் புகழ்ந்து பேசுகிறார்கள். அது உண்மைதான், நீ அவர்களுக்கு பால் தருகிறாய். ஆனால் நானோ உன்னைவிட ஒருபடி மேல். காரணம் என்னை மனிதர்கள் உண்கின்றார்கள். எனது தோலைக்கூட அவர்கள் விட்டுவைப்பதில்லை. நான் இறந்தபின் என்னையே நான் முழுவதும் தருகிறேன். இருந்தாலும் மக்கள் என்னைப் பாராட்டுவதில்லை. என்ன காரணம்?'' என்று வருத்தத்துடன் கேட்டது. அதற்குப் பசு நிதானமாகப் பதில் சொன்னது, ''நான் உயிருடன் இருக்கும்போதே பிறருக்குப் பயன்படுகிறேன். ஆனால் நீயோ இறந்த பிற்பாடுதான் மனிதருக்குப் பயன்படுகிறாய். அதனால் தான் மனிதர்கள் என்னைப் புகழ்கின்றார்கள்'' என்றது பசு.

உண்மையை உணர்ந்த செல்வந்தன் தான் உயிருடன் இருக்கும்போதே மக்களுக்கு நல்லது செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் அங்கிருந்து விடைபெற்றான்.

## கீழே உள்ள படத்தில் காணப்படும் 6 வித்தியாசங்களை கண்டுபிடியுங்கள்

**ஆக்கம்: வரதராஜன் விநோஜன்,** வீ.இல. 101, பிரிவு 25, வலயம் 2,இராமநாதன், ந.பு.நி

## கவிதைகள்

### அன்னையைப் போற்றுவோம்

பொறுமையாய் எங்களை
பூமியில் ஈன்றவள்
பூமியில் ஈன்றெமை
பூவாகக் காத்தவள்
வறுமையின் எதிர்ப்பிலும்
வளமாகக் காத்தவள்
வளமாகக் காத்தெமை
வாழ்வித்த தாயவள்

உதிரத்தைப் பாலாக்கி
உண்ணக் கொடுத்தவள்
அடுத்தவர் பசிக்குத்தன்
உணவையும் கொடுப்பவள்
அதிர்ந்து பேசாமல்
அன்போடு அணைப்பவள்
அகிலத்தில் தெய்வம்
அன்னையைப் போற்றுவோம்

**த.சிந்துயா**
தரம் 11
ஆனந்தகுமாரசாமி ந.பு.நி

## சிறுவர் பாடல்

பள்ளி செல்ல விரும்பு
பாடம் வெல்லக் கரும்பு
படித்து விட்டுத் திரும்பு
பண்ண வேண்டாம் குறும்பு
அரும்பு போல சிரிப்பாய்
எரும்பு போல இருப்பாய்
பிறரை அன்பாய் மதிப்பாய்
பிழையை என்றும் பொறுப்பாய்

அனுப்பியவர் : **சி.ரஜிவன்**
தரம் - 3, கதிர்காமர் ந.பு.நி

## சிங்களம் සිංහල Sinhala Let's learn Sinhala கற்போம்

பாடம் 1 : எழுத்துக்கள்

Lesson 1

| அ | ஆ | அ(எ) | அ(ஏ) | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஒ | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| අ | ආ | ඇ | ඈ | ඉ | ඊ | උ | ඌ | එ | ඒ | ඔ | ඕ |
| a | aa | ae | aee | ie | iee | u | uoo | e | ee | o | oou |

## நம் ஆசான்...

சமூகம் நம்மை மதிப்பதற்கும்
நற்பிரஜையாக வாழ்வதற்கும்
ஆசிகள் தந்தவர் நம் ஆசான்
கல்விக்கு கண்ணாய் இருந்து
கருணைக்கு மழையாய் இருந்து
பாதுகாப்பிற்கு வீரமாய் இருந்து
பணி செய்யும் ஆசானே

மண்ணில் பிறந்த நான்
மாண்புடன் வாழ்வதற்கும்
மற்றவர் மதிப்பதற்கும்
வழி அமைத்த ஆசானே

இருளை அகற்றி
அறிவெனும் ஒளியேற்றி
அரவணைக்கும் ஆசானே
ஆசானை மதித்திடுவோம்
ஆருயிர் உள்ளவரை

**எஸ். கேமலோஜினி**
தரம் 7, கதிர்காமர் ந.பு.நி.

## இந்தப் புழு மரத்தை அடைவதற் பாதையைக் கண்டு பிடியுங்கள்



**ஆக்கம்:**
G.S.தொண்டர் S.சஜீபா
இராமநாதன் ந.பு.நி.
வலயம் 02

## உங்களிடமிருந்து...

எனது பெயர் தே.சர்மினி. நான் தரம் 10ல் கல்வி கற்று வருகின்றேன். நான் தற்போது இடம்பெயர்ந்து இராமநாதன் நலன்புரி நிலையத்தில் வசித்து வருகின்றேன். கஸ்டத்தின் மத்தியில் வாழும் மக்களினதும் மாணவர்களினதும் கவலையைத் தீர்ப்பதற்காக ''மீண்டும் வாழ்வோம்'' பத்திரிகை வாரந்தோறும் வெளிவந்து அனைவரது மனங்களையும் மகிழ்விக்கின்றது. இதில் வரும் 8 பக்கங்களும் ஆவலுடன் பார்க்கக்கூடியதாக இருக்கின்றது. வசதி இல்லாத காரணத்தால் இலவசமாகவும் எம்மால் பெற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. எம் மனங்களில் உள்ள கவலைகளை வெளியேற்றும் அரிய சந்தர்ப்பமாக உள்ளதோடு அனைவரையும் மகிழ்விக்கின்றது.

**தே.சர்மினி**
இராமநாதன் ந.பு.நி.

# கண்ணிவெடி கவனம்
## Mind the mines








**கண்ணிவெடிகள் குறித்து விழிப்புடன் இருங்கள்**

*இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்ற நடவடிக்கைகளுக்கு மிதிவெடிகள் மிகப்பெரும் சவாலாக விளங்குகின்றன.*

*இலங்கையின் யுத்தம் நடைபெற்ற பகுதிகளில் சுமார் 1.5 மில்லியன் மிதிவெடிகளும் வெடிக்காத பொருட்களும் சுமார் 40 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் பரவிக் காணப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.*

*மீள்குடியேற்ற நடவடிக்கைகளுக்கு தெரிவு செய்யப்பட்ட பகுதிகளில் சுமார் 70 வீதமான மிதிவெடிகள் அகற்றப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.*

*எனினும் மீள்குடியேறும் மக்கள் மிதி வெடிகள் மற்றும் வெடிக்காத பொருட்கள் குறித்து அவதானத்துடன் இருக்க வேண்டும் என்று அனைத்து தரப்பினரும் அறிவுறுத்தி வருகின்றனர்.*

*'மீண்டும் வாழ்வோம்' நிகழ்ச்சித் திட்டமானது அரசாங்கம் மற்றும் ஐக்கிய நாடுகள் சபையின் சிறுவர் பாதுகாப்பு பிரிவுடன் இணைந்து "கண்ணிவெடி கவனம்" என்ற விழிப்புணர்வு பகுதியை மீள்குடியேறும் மக்களின் நலன் கருதி வழங்குகின்றது.*

*இதில் உள்ளடக்கப்படும் விடயங்கள் உங்கள் பாதுகாப்பை நோக்காகக் கொண்டவை. எனவே 'விழிப்போடு இருப்போம் , வருமுன் காப்போம்'*

*இந்தப் பரப்புரைத் திட்டம் உங்களிடம் இருந்தும் கருத்துகளை எதிர்பார்க்கின்றது. கண்ணிவெடிகள் தொடர்பான விழிப்புணர்வு திட்டம் எவ்வாறு உங்கள் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தியது என்பது குறித்து எங்களுக்கு எழுதி அனுப்புங்கள்.*

**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

கண்ணிவெடி ஒன்றினை கொள்வனவு செய்வதற்கான செலவு
**ரூ.350 - ரூ.1,200 வரை**

ஒரு கண்ணிவெடியை அகற்றுவதற்கான செலவு
**ரூ.35,000-ரூ.115,000 வரை**

**மிதிவெடிகளால் அதிகம் சிறுவர்களே பாதிக்கப்படுகிறார்கள்.**



## அன்பார்ந்த மக்களே....

**கடந்த கால யுத்தத்தின் விளைவாக எமது பிரதேசமானது மிதிவெடிகளாலும் யுத்த வெடிபொருட்களாலும் சூழப்பட்டிருப்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். இவைகள் மிகவும் ஆபத்தானவை. ஊனங்களை கொல்லவோ அல்லது அங்கவீனமாக்கவோ கூடியவை. இவற்றின் பாதிப்பிலிருந்து எம்மையும் எமது குழந்தைகளையும் உறவினர்களையும்** பாதுகாக்க சில வழிகள்.



**வெடிபொருட்களின் ஆபத்துக்கள் பற்றி ஏனையவர்களுக்கும் தெரியப்படுத்துவோம்.**




**எச்சரிக்கை அடையாளமிடப்பட்டுள்ள இடங்களுக்குள் செல்வதைத் தவிர்ப்போம்.**




**பாதையின் இருமருங்கிலும் மிதிவெடி அபாயமிருக்கும் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். பாதையை விட்டு விலகிச் செல்லாதிருப்போம்.**

**பாதுகாப்பானது என உறுதிப்படுத்தப்பட்ட பாதைகளை மட்டும் பயன்படுத்துவோம்.**

**கால் நடைகள் ஆபத்தான பிரதேசங்களுக்குள் செல்லவிடாது பாதுகாத்துக் கொள்ளுவோம்.**

**ஆபத்தான பகுதிகளென சந்தேகிக்கப்படும் பகுதிகளுக்குள் செல்லாதிருப்போம்.**

### சந்தேகத்திற்கிடமான பொருட்களைக் கண்டால் பின்வரும் நிறுவனம் ஒன்றிற்கு அறிவிப்போம்.

| வவுனியா மாவட்டம் | மன்னார் மாவட்டம் |
|---|---|
| CTF: 024 222 1127 | CTF: 023 222 2501 |
| DMAO: 024 222 4214 | DMAO: 023 222 2235 |
| SLA: 011 306 1231 | SLA: 011 306 1231 |
| MAG: 024 3243451 | MAG: 023 224 3451 |
| Sarvatra: 024 492 0206 | Sarvatra: 024 492 0206 |
| Horizon: 024 224 8150 | Horizon: 023 223 3055 |
| FSD: 024 458 9059 / 024 222 0052 / 024 324 5737 | |
| DDG: 024 324 8214 | யாழ்ப்பாணம் மாவட்டம் The Halo Trust: 021 320 5339 |
| UNICEF: 024 222 3485 | |

தங்கள் பகுதியிலுள்ள கிராம சேவை அலுவலர், பாதுகாப்புப் படையினர் ஆகியோருக்கும் தெரியப்படுத்துங்கள்



கண்ணிவெடி அகற்றலில் பயிற்றப்பட்ட உத்தியோகத்தர்கள் மாத்திரமே இவ்வாறான தேடுதல் செயன்முறைகளில் ஈடுபட முடியும்

**விறகிற்காகவோ அல்லது நாளாந்த தேவைகளுக்காகவோ காட்டு பகுதிகளுக்குள் செல்வதை தவிர்ப்போம்.**

இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2009ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29 ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.